உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - வைகாசி - 2014 - மே இதழ் - 23

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

களபமணம் கமழ்கின்ற கார்குழலி கவின்குவளைக்
கண்களுடன் கலைபெருகு கழனி வாசல்
காத்துவரும் கரும்புருவத் திருநெல்லை மதுநதியின்
கரையிலறம் வளர்த்துமனம் களித்த மாதின்
கைப்பிடித்த மான்மழுவன் கடல்தந்த நஞ்சுண்டன்
கவின்கொற்ற வாளீசன் தானே தோன்றிக்
கருணையொடு திருவளித்துப் பொற்பதங்கள் பணிவார்க்குக்
கல்விவளம் தந்துலகில் கற்றோர் ஆக்கிக்

களிவண்டு பண்மிழற்றிக் காந்தாரப் பண்ணிசைத்துக்
ககனவழிப் பறந்துசெலும் காட்சி கண்டு
கலைமுனிவர் பலரிருந்து கற்றுவரும் வேதாந்தம்
காதாரக் கேட்டகிளி கற்றுச் சொல்லக்
கற்பகமும் தேமாவும் கவின்பலவும் சண்பகமும்
கனிபழுத்த கனிமரங்கள் பலவு மாங்கே
காண்பார்க்கு விருந்தளிக்கும் வகையிலகி எழிலூட்டக்
கடுவனொடு மந்திபல திரியும் தென்றல்

வளியுலவ இலைகளெலாம் வளர்சிகையான் சிவன்புகழை
வழுத்துவபோல் சலசலக்க வாழும் புட்கள்
வழிமொழிவ போலரற்றிக் கடலனைய குளத்தவளை
வாய்திறந்தே அரகரா என்றங் கோத
வருமடியர் குழாங்களெலாம் கைகுவித்து வரம்கேட்க
வனசப்பூ குவளைமலர் கலந்த பொய்கை
வளர்கரையில் ஞானியர்கள் சிவன்நாமம் துதித்தோதி
வையமெலாம் வாழ்கவெனும் வரத்தைக் கேட்க

அளிபூண்ட வழுதியனார் அன்றுவந்து தானமைத்த
அருட்கோவில் இடங்கொண்ட அம்மை யப்பன்
அமர்கோயில் திருப்பணியை ஆண்டவரும் தொடர்ந்துசெய
அவர்க்கருளைச் செய்ததிரு நெல்லை மாதின்
அடிபணிவார் நலம்பெறுவார் அஃதுண்மை என்றறிந்தார்
அனுதினமும் வந்துபணி கோவி லூரின்
அன்னையாம் திருநெல்லை மகிழ்கொற்ற வாளீசர்
அடிமலர்கள் தலைக்கணிந்தே அஞ்ச லிப்பாம்.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர் .நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

பாரதசமயங்களிலே சனாதனதர்மத்திலே, வீடுபேறு அடைய மூன்று வகையான வழிகள் கூறப்படுகின்றன. அவை பக்தியோகம், கர்மயோகம், ஞானயோகம் எனப்படும். ஞானயோகத்திற்கு ஆராய்ந்து அறிகின்ற (விசாரிக்கின்ற) அறிவுவேண்டும். கர்மயோகத்திற்குத் தன்னலமற்ற, செயலாற்றக் கூடிய ஆற்றல் தேவை. பக்தி மார்க்கத்திற்கோ உளம் நிறைந்த அன்பு மட்டுமே தேவை.

நம்முடைய திருமடம் ஞானமார்க்கத்தை அத்வைத வேதாந்தத்தைப் போற்றுகின்ற, போதிக்கின்ற மடமாகும். ஆயினும் நம்முடைய மரபுப்படி பக்தி வழி மனதைப் பழக்கித் தூய்மைபெற்று ஞானமார்க்கத்திலே ஞானத்தைக் கடந்து, பிரம்ம சொருபத்தை அறிந்து உணர்ந்து, அனுபவித்து வீடுபேறு அடைய வேண்டும் என்பது நம்முடைய திருமடம் கைக்கொள்ளும் மார்க்கமாகும். எனவே நமக்குப் பக்தி என்பதை வீடுபேறு அடைவதற்கு அடிப்படைத் தேவையாகக் கொள்கிறோம்.

சுய மோகம், முழுச் சுயநலம் என்பது மிருககுணம் - கீழோர்குணம். அது படுகுழி நீர். அதுகலங்கும். தானும் கெடும். தன்னை உடையவனையும் அழிக்கும்.

அன்பு என்பது ஊற்று நீர், என்றும் வற்றாது. என்றும் தூய்மையானது. அது பெருக்கெடுத்து ஆறாக ஓடும் போது நாயன்மார்கள், ஆழ்வார்கள், மாணிக்கவாசகர், அருணகிரி, வள்ளலார்கள் தோன்றுவர். கட்டுக்குள் அடங்கி உள்ளபோது அன்பு பாசமாகிப் பந்தங்களை உருவாக்கும்; உற்றார், உறவினர்கள்பால் காட்டுகிற அன்பு என்பது பாசம். ஆனால் அது கட்டுக்களை, பந்தங்களை உருவாக்கும். மிகுந்த துயருக்கும் காரணமாகலாம். ஆனால் சுய மோகத்தைவிடக் குடும்ப அன்பு மேல்.

குடும்ப அன்பைத் தாண்டி ஊர், நாடு, உலகம் என்று விரிகின்ற போது காருண்யம் / கருணை என்கின்றவான் அளவாகப் பெருகுகிறது; அன்புக்கடல் தோன்றுகிறது. அதனை மனிதர்கள் சகஉயிர்கள்பால் செலுத்தும் போது ஜீவகாருண்யம் / மனிதநேயம் பெருக்கெடுக்கும். (அதனைத்தான் 'அன்பின் வழியது' 'அன்பேசிவம்' 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்று நம் முன்னோர்கள் போற்றிவந்துள்ளனர். அதிலேதோய்ந்தால் அருட்தொண்டர் கிடைப்பார் - அன்னைதெரசா பிறப்பார். கிருஷ்ணமா ஜெகன்நாதன் (விவசாயத்தைப் பாதுகாக்கும் சமூக சேவகர்) கிடைப்பார்கள்.

இறைவன்பால் செலுத்தினால் பக்திபிறக்கும் - பக்திவெள்ளம் பெருகினால், ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் தோன்றுவார்கள்.

சாதாரண மக்கள் இறைவனைத் தங்கள் தாயாக, தந்தையாகத்தான் காண்கிறார்கள். தம் துயர்தீர வழிகாட்டும் மேலான சக்தி என்றே போற்றுகிறார்கள். தொழுகிறார்கள்.

அதுவே நாட்பட நாட்பட நயத்தகு மேலான பக்தியாக, மெய்யன்பாக உருவெடுக்கலாம். சுய நலத்தோடு, பொதுநலத்தையும் சேர்த்துத் தொண்டாற்றுவது போல் தனக்கு மட்டுமே வேண்டித் தொழுகின்ற, வணங்குகின்ற நிலைதாண்டி உலகில் உள்ள எல்லா உயிர்கட்காவும் வேண்டித் தொழத் தொடங்கப்படுவதே அடுத்த கட்டம். 'வாடியபயிரைக் கண்டுவாடுகின்ற' அருள் நிலைபெறுவது மூன்றாவதான உச்சக்கட்டம்.

மந்த அதிகாரி, மத்திம அதிகாரி, உத்தம அதிகாரி என்று பக்குவிகளைப்பிரிப்பதுபோல் தன்னலப் பக்தன் - உலகியல் பக்தன், அருள்நிலைப்பக்தன் என்று இறைச்சிந்தனை உயரவேண்டும். தெளிய வேண்டும். சிறக்கவேண்டும்.

''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி''..... உருகிக் கசிந்து இறைவன் அடி சிந்திக்க வேண்டும். நாடிப் பெறவேண்டும்.

'மெய்தான் அரும்பிவிதிர்விதிர்த்
துன்விரையார் கழற்கென்
கைதான்தலைவைத்துக் கண்ணீர்
ததும்பிவெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
சயசயபோற்றி யென்னும்
கைதான் நெகிழவிடேன் உடை
யாயென்னைக் கண்டுகொள்ளே'.

என்று மாணிக்கவாசகர் சொல்வதுபோல் உடல், உயிர், உள்ளம் அனைத்தும் இணைந்து வணங்கும் நிலை பெறவேண்டும். அப்படி அன்புப் பிழம்பாகத் திகழ்ந்து ஆறே நாளில் முக்திபெற்றவேடன் கண்ணப்பன் போல் முழு மனத்தோடு இறைவனை வணங்குவதே உண்மையான பக்தி. ஆழ்ந்தபக்தி ஆண்டவனைக் காணும் வழிகளில் ஒன்று. எளிமையானது. ஆனால் அதில் உறுதி வேண்டும். உண்மைவேண்டும். முழுமைவேண்டும்
மேலும் சிந்திப்போமாக !

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*



ஸ்ரீசேஷாத்ரி சிவனார் அருளிய

# நா நா சீவ வாதக் கட்டளை (தொடர்ச்சி)

உரை விளக்கம் : சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

## நூல்

இனி, ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவத்தைகளும் சொல்லும்படி: கற்பிதப் பிரபஞ்ச வடிவமாகத் தோற்றுகின்ற தூல பஞ்ச பூதங்களிலே தோன்றிய மூன்று சாதியாய் இருக்கின்ற தூல சரீர சமஷ்டியும் கூடி, ஈசுர தூல சரீரம் என்றும், விராட் என்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சாக்கிராவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், வைசுவானரன் என்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம் பிரமா என்றும் சொல்லப்படும். சூக்ஷ்ம பூதங்கள் ஐந்தும், அந்தப் பூதங்களிலே தோன்றிய, சூக்ஷ்ம சரீர சமஷ்டியும் கூடி, ஈசுர சூக்ஷ்ம சரீரம் என்றும், இரண்யகர்ப்பம் என்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சொப்பனாவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், சூத்திராத்மா என்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம் விஷ்ணு என்றும் சொல்லப்படும். இந்தத் தூலம், சூக்ஷ்மம் இரண்டின் வாசனையுடனே கூடியிருக்கின்ற மாயை, ஈசுர காரண சரீரம் என்றும், அவ்வியாகிருதம் என்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சுழுத்தி அவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், அந்தர்யாமி என்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம், உருத்திரன் என்றும் சொல்லப்படும். சீவன் தன் மூன்று அவத்தைகளிலும், தன் மூன்று சரீரங்களாயிருக்கின்ற இருபத்தேழு தத்துவங்களுடனும் நான் என்று கலந்து நிற்கின்றது போல, ஈசுரனும் தன் மூன்று அவத்தைகளிலும் தன் மூன்று சரீரங்களாயிருக்கின்ற முப்பத்து இரண்டு தத்துவங்களுடனும் கலந்து நிற்பன். ஆகையினாலே, சீவ சிதாபாசன் தன் சரீர மாத்திரமே கலந்து நிற்பன். ஈசுரன், தன் சரீரமாகிய சகல சரீரங்களோடும், சகல பிரபஞ்சங்களோடும் கலந்து நிற்பன. இந்த இரு வகைக்கும் சாட்சியாய் இருக்கின்ற

**பிரம சைதன்னியமும், சகல சரீரங்களிலும் சகல பிரபஞ்சங்களிலும் நிறைந்து, அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்து எல்லை யற்றிருக்கும்.**

## உரை

சீவர்களுக்கு மூன்று தேகங்கள் (தூலம், சூட்சுமம், காரணம்) மூன்று அவத்தைகள் ( சாக்கிரம், சொப்னம், சுழுத்தி) கூறியது போல் ஈசுவரனுக்கும் கூறப்பட்டுள்ளன. சீவர்கள் அனைவரின் தூலதேகம் கூடியதே ஈசுவரனின் தூல தேகம். இதனை 'சமஷ்டி' என்பார்கள்

'சமஷ்டி' என்றால் 'பன்மை' - சேர்ந்தவை என்பது பொருள். வியஷ்டி என்றால் ஒருமை, தனியாக உள்ளது என்று பொருள். மாமரம் வியஷ்டி மாந்தோப்பு சமஷ்டி. மாமரங்களின் தொகுப்பு. அது போல் சீவன்களின் உயிர்த் தொகுப்பு ஈசுவர பரு உடல் தொகுப்பான ஈசுவரனுடைய தூல உடம்பும் மூன்று அவத்தைகள் கூடியனவாக இருக்கும். அப்படி மூன்று வகை உடல்களும் மூன்று அவத்தைகளும் ஈசுவரனுக்கும் சொல்லப்படுகின்றது.

ஈசுவர தூல சமஷ்டி (பரு உடல் தொகுப்பு). 'விராட்' என்று சொல்லப்படும். இவ்விராட் சாக்கிர அவத்தையில் கூடி இருக்கும் ஈசுவரன். வைசுவாரைன் என்று அறியப்படும். இவற்றிற்கு அஸ்திவாரமாக, (அதிஷ்டானம்) அடிப்படையாக உள்ளது. அதிஷ்டான சைதன்யம் பிரம்மா ஆகும். இது போல சூட்சும பூதங்களுடன் கூடிய சூட்சுமம் சரீர சமஷ்டி இரண்ய கர்ப்பன் என்று கூறப்படும். இரண்ய கர்ப்பனுடன் கூடிச் சொப்பன ( கனவு நிலை ) அவத்தையில் பொருந்துகின்ற ஈசுவரன் 'சூத்திராத்மா' என்று அழைக்கப்படும். இவற்றிற்கு அதிஷ்டானமாக உள்ள சைதன்யம் / கடவுள் விஷ்ணு என்று கூறப்படுகிறது.

மேற்கூறிய பரு உடல் நுண்உடல் எனும் இரண்டின் வாசனையுடன் ( விடாத தொடர்பு - சித்தப் பதிவு ) கூடிய மாயை - ஈசுவரனின் காரண சரீரம் என்று சொல்லப்படும். காரண உடல் என்பது நுண் உடல் பரு உடல் இரண்டும் தோன்றுவதற்குக் காரணம் ஆகிய

அவ்வியாக்ருதமாக இருக்கும் (அவ்வியாக்ருதம் = சிருஷ்டிக்கு முன் வெளிப்படாதது - Potential) இதனை 'அவ்யாக்ருதம்' என்று சொல்வார்கள். இது சுழுத்தி அவத்தை (ஆழ் உறக்க நிலை)யுடன் கூடி உள்ள போது ஈசுவரன் 'அந்தர்யாமி' என்றழைக்கப்படுவான். (தோன்றாத கடவுள்) இவற்றின் அதிஷ்டானம் ருத்திரன் ஆகும்

| சரீரம் | அவத்தை | பெயர் | அபிமானி | அதிஷ்டானம் |
|---|---|---|---|---|
| தூலம் | சாக்கிரம் | விராட்டு | வைகாரகன் | பிரம்மன் |
| சூட்சுமம் | சொப்பனம் | இரண்யகர்ப்பன் | சூத்ராத்மா | விஷ்ணு |
| காரண சரீரம் | சுழுத்தி | அய்யாக்ருதன் | அந்தர்யாமி | ருத்திரன் |

சீவன் தன் மூன்று வகையான உடல்களுடன் மூன்று விதமான அவத்தைகளில் தன் மூன்று சரீரங்களுக்குரிய இருபத்தேழு தத்துவங்களுடன் கூடி நான் என்று கலந்து இருப்பான் (தூல சரீர தத்துவம் 6 - சூட்சும சரீர தத்துவம் 20 - காரண சரீரம். ஆக 27). அதே போல ஈசுவரனும் தன்னுடைய மூன்று வகையான உடல்களுடன் மூன்று விதமான அவத்தைகளுடன் கூடி மூவகை உடலுக்குரிய தத்துவங்கள் முப்பத்திரண்டுடன் கூடி - ஈசுவரன் தன் சரீரமாகிய அனைத்து சீவர்களுடன் சகல உலகங்களோடும் 32 தத்துவங்களுடன் கூடி நிற்பான். (மேற்கூறிய 27+ தூல பூதங்கள் 5 = ஆக 32)

இந்த இருவகைக்கும் சகல சாட்சியாக இருக்கும் மெய்யுணர்வுப்பொருளும் (பிரம்மம்) பிரம சைதன்யமும் சகல உயிர்கள், எல்லா அண்ட சராசரங்களிலும் நிறைந்தும், அவற்றிற்கு அப்பாலும் பத்துத் திசைகளிலும் எல்லையற்றுப் பரவி இருக்கும்.

## நூல்

**சீவனுக்குத் தூல சரீர வியவகாரத்திற்கு, அன்னமயமான சட்கோச தத்துவங்கள் -6, சூக்ஷும சரீர தத்துவங்கள் - 20, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5 ஆகத் தத்துவங்கள்-31. சூக்ஷும சரீர வியவகாரத்திற்கு, சூக்ஷுமசரீர தத்துவங்கள் 20, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்**

5 ஆகத் தத்துவங்கள்-25. காரண சரீர வியவகாரத்திற்கு, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5. சீவ வியவகாரத்திற்கு, சீவன், ஈசுரன், பிரமம்-3. சாட்சி வியவகாரத்திற்கு, சாட்சி-1. ஈசுரனுக்குத் தூல சரீர வியவகாரத்திற்கு, சமஷ்டி அன்மையகோச தத்துவங்கள்-6, சமஷ்டி சூக்ஷும சரீர தத்துவங்கள்-20, சமஷ்டி சீவன், அவித்தை2, ஈசுரன், வித்தை, பிரமம்-3, தூல பூதங்கள் - 5 ஆகத் தத்துவங்கள் -36. சூக்ஷும சரீர வியவகாரத்திற்குச் சமஷ்டி சூக்ஷும சரீர தத்துவங்கள்-20, சமஷ்டி சீவன், அவித்தை-2 சூக்ஷும பூதங்கள்-5, வித்தை, ஈசுரன், பிரமம்-3 ஆகத் தத்துவங்கள்-30. காரண சரீரவியவகாரத்திற்கு வித்தை, ஈசுரன், பிரமம்-3. ஈசுர வியவகாரத்திற்கு ஈசுரன், பிரமம்-2, பிரம வியவகாரத்திற்கு பிரமம்-1. இந்திரிய வியவகாரத்திற்கு இந்திரியம்-1, சட்கோச தத்துவங்கள்-6, அந்தக்கரணம்-5, வாயு -5, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5 ஆகத் தத்துவங்கள் -22. மனோராச்சிய வியவகாரத்திற்கு, அந்தக்கரணம்-5, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5 ஆகத் தத்துவங்கள் - 10. இப்படித் தத்துவங்களினுடைய தோற்றமும், நிலையும் சொல்லப்பட்டன.

## உரை

சீவனுக்கு / உயிர்களுக்குப் பருவுடல் பணியாற்ற / தொழில் செய்ய வேண்டிய தத்துவங்கள் (உறுப்புக்கள்) பருவுடலுக்கு உரிய அன்மைய ஆறு தத்துவங்கள் ( தோல், எலும்பு, நரம்பு, சதை, ரத்தம், மஞ்சை(மென் கொழுப்பு) வாயுக்கள் -5, அர்த்தகாரணங்கள் -5- ஆக 20)- சீவன், ஈசுவரன், அறியாமை (அவித்தை) அறிவுடமை (வித்யை / மாயை / கூடஸ்தன் ) பிரமம் ஆக 5- ஆக மொத்தம் 31 தத்துவங்கள் தேவை தூல சரீரக் காரியங்களைச் செய்வதற்கு.

நுண் உடலின் (சூட்சுமதீரம்) காரியங்களைச் செய்வதற்கு - சூட்சும் சரீரத் தத்துவம் - 20, சீவன், ஈசுவரன், அறியாமை, பிரமம் ஆக

மொத்தம் 25 தத்துவங்கள் தேவைப்படும். காரண் சரீர விவகாரத்திற்கு (செயல்பாட்டிற்கு) சீவன், அவத்தை, ஈசுவரன், வித்தை, பிரம்மம் ஆக 5 தத்துவங்கள் தேவை. சீவன் செயல்பாட்டிற்கு சீவன், ஈசுவரன், பிரம்மம் ஆக மூன்று தத்துவம் தேவை. சாட்சி வியவகாரத்திற்குத் தேவை சாட்சியான பிரமம் மட்டுமே.

ஈசுவரனுக்கு - பரு உடல் செயல்பாட்டிற்கு - தொகுப்பான நுண் உடல் தத்துவங்கள் 20 - சமஷ்டி ( தொகுப்பான) சீவன் மற்று அவத்தை ஆக 2, ஈசுவரன், அறிவுடைமை/ மாயை, பிரம்மம் - 3, தூல பூதங்கள் - 5, ஆக தத்துவங்கள் - 36

ஈசுவரன் தொகுப்பு நுண் உடல் (சமஷ்டி சூட்சும சரீரம்) செயல்பாட்டிற்கு தொகுப்பு நுண் உடல் தத்துவங்கள் - 20, சமஷ்டி சீவன் + அவித்தை -2, சூட்சும பூதங்கள்5, ஈசுவரன், வித்தை பிரம்மம் -3 ஆகத் தத்துவங்கள் - 30 -

ஈசுவரன் காரிய சரீர வியவகாரத்திற்கு அறிவு, ஈசுவரன், பிரம்மம் ஆக 3.

ஈசுவரன் செயல்பாட்டிற்கு ஈசுவரன் + பிரம்மம் ஆக இரண்டு தத்துவங்கள் தேவை.பிரம வியவகாரத்திற்கு பிரம்மம் மட்டுமே. (பிரம்மம் செயல் படுவது இல்லை. ஆனால் எல்லாச் செயல்களுக்கும் ஆதாரமாகவும், அடிப்படையாகவும், காரணமாகவும் உள்ளது பிரம்மம் - தத்துவ விவகாரத்திற்காகப் பிரம்மத்திற்கு வியவகாரம் கற்பிக்கப் பட்டுள்ளது.)

இந்திரியம் செயல்பாட்டிற்கு - சம்பந்தப்பட்ட இந்திரியம் + பரு உடல் தத்துவங்கள் + 6 அந்தக்காரணம் 5 + வாயு 5 + சீவன், ஈசுவரன், அவத்தை, வித்தை, பிரம்மம் -5 ஆக மொத்தம் - 22 தத்துவங்கள்.

மனோ ராச்சிய வியவகாரத்திற்கு (மனக் கற்பனையான செயல்பாட்டிற்கு) அந்தக்காரணம் - 5+சீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரம்மம் - ஆக 10 தத்துவங்கள்.

இப்படியாகத் தத்துவங்களின் தோற்றமும் இருப்பும் கற்பிதமாகச் சொல்லப்பட்டன.

**சீவர்கள் :** பருவுடல் செயல்பாடு : பருவுடல் தத்துவங்கள் - 6 + ஞானேந்திரியம் 5+ அர்த்தக்கோணம் 5+வாயுக்கள் 5+சீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை பிரம்மம் 5 ஆக - 31.

**நுண் உடல் செயல்பாடு :** பருவுடல் தத்துவங்கள் ஆறும் தேவையில்லை. மற்றைய 25 தத்துவங்களும் செயல்படும்.

**காரண சரீரம் :**

சிவன் + ஈசுவரன் + அவித்தை + வித்தை + பிரம்மம் ஆக -5

**சிவன் செயல்பாட்டிற்கு :** சிவன் + ஈசுவரன் + பிரம்மம் -3

**சாட்சி வியவகாரத்திற்கு** - பிரம்மம் ( சாட்சி ) மட்டுமே.

**ஈசுவரன்:**

பருவுடல் (தூய சரீரம்)

தொகுத்த அனைத்துப் பருஉடல்களின் தத்துவங்கள் 6+

தொகுத்த நுண்உடல் தத்துவங்கள் - 20 +

தொகுத்த சீவர்கள் தொகுத்த அவித்தை - ஆக 2 +

ஈசுவரன், வித்தை, பிரம்மம் - 3 ஆக மொத்தம் : 31

நுண் உடல் (சூட்சும சரீரம்) செயல்பாட்டிற்கு

தொகுத்த பருஉடல் தத்துவங்கள் 6 தவிர்த்து மற்றைய 30 தத்துவங்களும் தேவை.

**காரண சரீரம் செயல்பட :** வித்தை, ஈசுவரன், பிரம்மம் ஆக 3 தத்துவங்கள்.

ஈசுவரன் செயல்பட - ஈசுவரன் + பிரம்மம்

பிரம்மம் செயல்பட - பிரம்மம் மட்டுமே.

*தொடரும்....*



## சேக்கிழார் போற்றும் பெண்ணின் பெருமை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

# ஏயர்கோன் கலிக்காமர் வரலாறு

ஏயர்கோன் கலிக்காமர் மனைவியார் இருநாயன்மார்களுடன் நெருங்கிய உறவு கொண்டவர். மானக்சஞ்சாற நாயனார் மகளாகப் பிறந்து கலிக்காமர் மனைவியாக ஆனவர். பிறந்த வீட்டிலும் புகுந்த வீட்டிலும் பரமன் அடி பேணும் பண்பு வழி வழி வந்தது. இவரைப் பற்றிய செய்திகளை இரு வரலாறுகளிலும் மிகச் சுருக்கமாக ஆனால் தெளிவாகவும் அழகாகவும் சொல்கிறார் சேக்கிழார்.

இவருக்குக் கலிக்காமருடன் மணம் பேசி முடிக்கப்படுகிறது. தந்தையாரும் பெருந்தன வேளாளர். அரசனிடம் சேனைத்தலைவர். மணமகனும் செல்வந்தர்; அரச சேனைத்தலைவர். இருபுறமும் செல்வச் செழிப்பும் சிவனடியார் பேணும் பண்பும் பொதுவாக உள்ள பேறு பெற்றவர்.

மணநாளுக்கு முதல் நாள் மணமகன் அவருடைய பதியான பெருமங்கலத்தில் இருந்து புறப்பட்டுச் சுற்றமும் நட்பும் சூழ வந்து கொண்டிருக்கிறார். அது வேளையில் மாவிரதர் வேடம் பூண்டு, மானக்சஞ்சாறர் தம் புகழ் விரிக்கும் எண்ணம் கொண்டு சிவனார் வருகிறார்.

ஈறில் பெருந்திரு உடையார் உடையார் எனில் கூறுவதன் முன் குறிப்பறிந்து கொடுக்கின்ற பண்புடைய மானக்சஞ்சாறரிடம் சிவன் என்ன வேண்டுகிறார் தெரியுமா?

"அணங்கிவள் தன் மயிர் நமக்குப் பஞ்சவடிக்காம்" ('பஞ்சவடி' அமரும் ஆசனத்தின் மேல் பரப்புவது ) என்கிறார்.

நாளை திருமணம். மணமகள் இவர் மகள். அவளுடைய கூந்தலோ "மஞ்சுதழைத்து என வளர்ந்த மலர்க்கூந்தல்" மேகம் போன்று கருமை படர்ந்து வளர்ந்த கூந்தலை எமக்குத் தா. நமக்கு அது ஆசனமாகும் என்கிறார். தலைமுடியை அறுத்தல் அமங்கலம்

இல்லையா? நாளை வருகின்ற உறவினர் என்ன பேசுவார்கள் ! இல்லை இப்போது வரப்போகின்ற மணமகன் எப்படி எடுத்துக்கொள்வான்! இதனால் திருமணமே தடைப்படும் வாய்ப்பு உண்டே! எல்லாவற்றிற்கும் மேலாகத் தன் மகள் என்ன நினைப்பாள்? எது பற்றியும் சிந்திக்கவில்லை நாயனார்.

உடன் குறுவாளை உருவி, "பூங்கொடி தன் இருள் செய்த கருங்கூந்தல் அடியில் அரிந்து எதிர் நின்ற மருள் செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தின் இடை" நீட்டினார். நீட்டிய பொருளை வந்தவர் கைக்கொள்ளவில்லை. விடையேறி விண்ணில் தோன்றி வாழ்த்தியருளினார்.

இந்நிகழ்ச்சியில் பூங்கொடி தன் தந்தையின் மனத்தளவிலாவது செயலை எதிர்த்திருப்பாரா? இல்லையா? ஏன் இதுபற்றிச் சேக்கிழார் சொல்லாது நழுவுகிறார் என்ற ஐயம் எழும். ஆனால் பின்னர் கலிக்காமர் வரலாறு படிக்குங்கால் இது முழுமையாகத் தெரியும். நங்கையும் முழுச் சம்மதத்துடன் தான் மகிழ்ந்தே தந்தை தன் கூந்தல் அரிய ஒப்பி நின்றார் என்பது. இங்கேயும் வற்புறுத்தல் இல்லை என்பதை நாம் தெளிவாக அறியலாம்.

ஏயர்கோன் கலிக்காமர் வரலாறு பற்றிச் சிந்திக்குமுன் நாம் சிறிதளவு சுந்தரர் வரலாற்றையும் அறிந்து கொள்ள வேண்டும். இருவர் வரலாறும் நெருங்கிய தொடர்புடையன.

ஞானசம்பந்தர் இறைவனால் மகனாக ஏற்றுக்கொள்ளப்பட்டவர். அதற்குரிய உரிமையுடன் சில நேரங்களில் சலுகைகளை வேண்டிப் பெற்றிருக்கிறார். அப்பர் தன்னை ஈசன் அடிமையாக ஆக்கிக் கொண்டவர்; இவர்தான் எந்த நிலையிலும் சிறு சலுகை கூடச் சிவனை வேண்டிப் பெறவில்லை.

'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பதைக் கொள்கையாகக் கொண்டு கைத்திருத்திருத்தொண்டும் செய்து வாழ்ந்தவர். மாணிக்கவாசகர் சிவனைக் குருவாகக் கொண்டு உருகி உருகிப்பாடியவர்.

சுந்தரரோ ஈசனால் தோழனாகக் கொள்ளப்பட்டவர். எனவே இவர் தோழர்க்கு உரிய அத்தனை உரிமைகளையும் சலுகைகளையும் ஈசனிடம் வேண்டிப் பெற்றவர்.

திருவெற்றியூர் திருத்தலத்திலே மகிழ மரத்தடியிலே சிவனுக்கு எதிரிலேயே பொய்ச் சத்தியம் செய்து சங்கிலியாரை மணந்து, பின்னர் சிவத்தொண்டின் நினைப்பாலே கொடுத்த வாக்கை மறந்து புறப்பட்டு விடுகிறார். தண்டனையாக இருகண்களும் குருடாகப் போகின்றன. பின்னர் உருகி உருகிப்பாடி திருக்கச்சி ஏகம்பத்தில் ( காஞ்சிபுரம் ஏகாம்பரர் திருக்கோயில் ) இடக்கண் பார்வை பெறுகிறார். மறுகண் பெறப் பெரும்பாடு பட்டுப் போகிறார். அதிலே நொந்து திருவாரூர் ஈசனைப் பார்த்து

"மற்றைக்கண்தான் தாராது ஒழிந்தால் வாழ்ந்து போதீரே!"

என்று சலித்துக்கொள்கிறார். முன்னர் தவறுக்கு நொந்து பாடியவர் நாள் செல்லச் செல்ல தன் உரிமை எண்ணி அதிகாரமாக வேண்டி - வேண்டுதல் பலிக்க மற்றைக் கண்ணும் பெற்று விடுகிறார்.

திருவாரூர் வந்ததும் மற்றவை மறந்து முதல் மனைவி பரவையார் நினைப்பு, தம்பிரான் தோழரை வாட்டத் தொடங்கியது. தம்மை மறந்து சங்கிலியாரை மணந்த செய்கையினாலே மனத்துயரில் ஆழ்ந்த பரவையார் உறவை மறுக்க எம்பிரானாரையே தூதாக வேண்டுகிறார். தம் தோழர்க்காக ஈசனும் இரவு முழுவதும் நடந்து திரிந்து பரவையாரைச் சமாதானப்படுத்திச் சுந்தரரைச் சேர்த்து வைக்கிறார்.

இதனை அறிந்து ஏயர்கோன் கலிக்காமர் கடுஞ்கினங் கொள்கிறார். ஈசனைக் கால்கடுக்க வைத்துத் தூது செல்ல வைத்த சுந்தரரைக் கண்டால் என்ன ஆகுமோ என்று வெருள்கிறார்.

சிவனுக்கு இது பெரிய சவாலாக ஆகி விடுகிறது. தனக்கு மிக வேண்டிய இருவர்க்குள்ளே உண்டான பிணக்கைத் தீர்க்க வேண்டிய கட்டாயம். ஒருவர் வழிவழியாக அடிமை பூண்ட மிகச் சிறந்த அடியவர். அடுத்தவர், தனது தோழர். பிணக்கைத்தீர்க்க அவருடைய

வழக்கமான வழியையே தேர்ந்தெடுக்கிறார். ஏயர்கோனுக்குச் சூலைநோய் தந்து, அவர் கனவிலுந் தோன்றி இந்தச் சூலை நோய் சுந்தரன் வந்து தீர்த்தால் ஒழியத் தீராது. உன்னுடைய நோயைத் தீர்க்க அவன் புறப்பட்டு வருகிறான் என்று தெரிவிக்கிறார்.

இதற்கு மனம் ஒப்பவில்லை, கலிக்காமருக்கு; நாங்கள் உமக்கு வழி வழி அடிமை பூண்டவர்கள். எம் நோய் தீர்ப்பதற்கு நேற்றுத் தோன்றிய புதிய தோழரா. உமக்கு ஏற்பட்ட சிரமத்தை நீர் மறந்தாலும் நான் பொறுத்துக்கொள்ளத் தயார் இல்லை. சுந்தரன் வந்து என் நோய் தீர்வதிலும் அந்நோயால் நான் இறப்பது மேல் என்று வெகுண்டு தன் வயிற்றைக் கிழித்துக் கொண்டு இறந்து விடுகிறார். சூலை நோயும் தீர்ந்து விடுகிறது.

இறைவனுடைய தீர்ப்புக்கே மறுப்புச் சொன்னவர் "நெற்றிக் கண்ணைத் திறப்பினும் குற்றம் குற்றமே" என்ற நக்கீரர் மட்டும் அன்று, பெரியபுராணங்களில் கூறிய அறுபத்து மூவரில் இருவர் முரண்பட்டார்கள்; விறன் மிண்ட நாயனார், ஏயர்கோன் கலிக்காம நாயனார் இருவருமே சிவனுடன் முரண்பட்டதற்குக் காரணம் சுந்தரர்க்கு ஈசன் தோழமை காரணமாகத்தந்த சலுகைகள்தான்.

திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தில் அடியார் திருக்கூட்டம் நிறைந்திருக்க அவர்களைக் கண்டு கொள்ளாது நேரே சிவன் சந்நிதிக்குச் சென்று வணங்கித் திரும்புகிறார் சுந்தரர். சுந்தரர் அடியவர்கட்குரிய மரியாதை செலுத்தாமை கண்டு சினமுற்றுச் சிவனையும் புறம்பு என்று கூறி விடுகிறார் விறன் மிண்டர்.

"........ சிவனார் அடியார் திருக்கூட்டம் பேணாது ஏகும் ஊரனுக்கும்
பிரானாம் தன்மைப் பிறைசூடிப் பூணார் அரவம் புனைந்தார்க்கும் பிருகு"

என்று சூள் உரைத்துவிடத் துணுக்குற்ற சுந்தரர் பெருமான் தனது அடியார் பக்தியை நிலைநிறுத்தவும் தன் தவறுக்கு மன்னிப்பு வேண்டியும் இந்த உலகத்தின் தலை சிறந்த இலக்கியமான பெரியபுராணம் தோன்ற மூலம் ஆன "திருத்தொண்டத்தொகை" பாடி அறுபத்து மூவர்க்கு அஞ்சலி சொல்கின்றார். சுந்தரராலே

திருத்தொண்டத் தொகையில் "ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்" என்று பாடப் பெற்றும், சுந்தரருடன் நெருங்கிய நட்பும் பூண்டிருந்த கலிக்காமர் தன் கருத்தில் 'அடாத செயல்' எனத் தோன்றிய தூதிற்குப் பிறகு ஈசனே கட்டளையிட்டாலும் சுந்தரரைப் பார்க்க மறுத்து உயிர் துறக்கிறார்.

இனிமேல்தான் இந்த வரலாற்றின் உச்சம் நிகழ்கிறது. கணவர் தன்னைத் தானே கொள்கை உறுதி காரணமாக மாய்த்துக் கொண்ட துயரத்தை உணரக் கூட இறைவன் நாயகிக்கு நேரம் தரவில்லை. சுந்தரர் ஊரை நெருங்கி விட்டார் என்ற செய்தி வருகிறது.

நாயகியாரைப் பொறுத்தமட்டில் சுந்தரர் தம்பிரான் தோழர், சிவனுக்கு அணுக்கத்தொண்டர்; அவர் அருளைப் பூரணமாகப் பெற்றவர். அவர் வீடு தேடி வருகிறார். எனவே துக்கம் கொண்டாடுவதை விட அவரை வரவேற்பது முக்கியமான கடனாகப் படுகிறது. ஏவலர்கள் அனைவரையும் அழக்கூடாது; நாயனார் இறந்த செய்தி வெளியே தெரியக்கூடாது என்று ஆணையிட்டுச் சுந்தரரை முறைப்படி வரவேற்க ஆயத்தமாகிறார்.

சுந்தரரும் வருகிறார். தீபம் ஏற்றி நிறைகுடம் கொண்டெதிர் கொண்டு மாலை சாத்தி இல்லத்துள் அழைத்து ஆசனத்து அமர்த்துகிறார். நாவலூரரும் முகமலர்ந்து வரவேற்பை ஏற்று - கலிக்காமரைச் சந்தித்து அவர் நோய் தீர்த்து மனமகிழ்ந்திருக்க அவாவுறுகிறார். எங்கே கலிக்காமர் என்று கேட்க, 'அவர்க்குத் துயர் ஏதும் இல்லை அயர்ந்து தூங்குகிறார்' என்று நாயகியார் சொல்கிறார். ஆனால் மனம் கேட்காது சுந்தரர் வற்புறுத்துகிறார்.வேறு வழியின்றி உள்ளே அழைத்துச் செல்கிறார்கள். நிலைமை புரிந்து தன் நண்பருடன் தன் உயிரையும் மாய்த்துக் கொள்ள முயலுங்கால் தடுத்தாட் கொள்கிறான் எமபிரான். கலிக்காமரும் உயிர்பெற்று எழுந்து 'கேளிரே ஆகிக்கேட்டேன்' என்று வாளினைப் பற்றித் தடுக்கிறார். உடன் சுந்தரர் கலிக்காமர் பாதம் பணிய, கலிக்காமர் தாமும் வன்தொண்டர் காலில் விழுகிறார். இருவரும் தங்கள் நட்பினைப் புதுப்பித்துக்கொண்டு

உலகம் உய்வித்தார்கள்; தொண்டர்களாகச் சிறக்க வாழ்கின்றார்கள். பலகால் தொண்டியற்றிப் பரமனடி சேர்ந்தனர்.

நாயகியர் பண்பு, உளத்துரம், அடியவர் சீர்பரவுந்தன்மை அனைத்தும் தெள்ளென விளங்குகின்றது. கணவன் இறந்து கிடக்கும் நேரத்தும் தனது கடமை, அடியவர் விருந்தோம்பலை மறவாது செய்ததனால் நாயனாரின் குலகௌரவம் காக்கும் நாயகியின் சிறப்புத் தெரிகிறதல்லவா ?

இது நாயகியார்க்கு அவர் குண நலனுக்காகக் கிடைத்த சிறப்பல்லவா?

*தொடரும்....*

# மடாலய நிகழ்வுகள்

25.4.2014 அன்று சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் இலக்கியப் பூங்கா நிகழ்ச்சி நடைபெற்றது. முன்னதாக காப்பியக் கவிஞர் நா. மீனவர் வரவேற்புரை வழங்கினார். சுவாமிகளின் ஆசியுரைக்குப் பின்னர் எறிபத்த நாயனார் என்னும் தலைப்பில் மேனாள் ஆயுள் காப்பீட்டுக் கழக அதிகாரி உயர்திரு. வினைதீர்த்தான் சிறப்புச் சொற்பொழிவு ஆற்றினார். நிறைவாக பேராசிரியர் கார்மேகம் நன்றியுரை கூறினார். இலக்கிய அன்பர்களும், ஆன்மீக ஆர்வலர்களும் கலந்து கொண்டு நிகழ்ச்சியைச் சிறப்பித்தனர்.

26.4.2014 அன்று பூஜை பழனியப்ப ஐயா குருபூஜையும், 29.4.2014 அன்று கோட்டையூர் அழகப்ப ஐயா குருபூஜையும், 30.4.2014 அன்று மகா வெங்கடாஜலம் ஐயா குருபூஜையும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.



## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும்

(சாது மெய்யப்ப ராமஸ்வாமி, கோவிலூர் மடாலயம்)

"பக்திக்குப் பாகவதம், கர்மாவுக்குக் கீதை" என ஆதார நூல்கள் குறிப்பிடுவது போன்று, "ஞானத்திற்கு வாசிட்டம்" எனக் கூறும் வழக்கம் உண்டு. இந்நூலின் ஆசிரியர், வால்மீகி முனிவர். அவர் இதனை, ஸ்ரீராமருக்கு வசிட்டமுனிவர், கதைகள்மூலம் ஞான உபதேசம் செய்ததாக, 32000 கண்ணிகளில் வடமொழியில் யாத்தார். இதனைச் சுருக்கி, அபிநந்தர் என்பவர் 6000 வடமொழிக் கண்ணிகளாக்கினார். இதுவே, ஞானவாசிட்டம் எனும் பெயருடன் 2055 மூலத் தமிழ்ச் செய்யுள்களாக வீரை ஆளவந்தார் முனிவரால் ஆக்கப்பட்டது.

இத்தமிழ் நூலுக்கு, கோவிலூர்த் துறவாண்டவரின் மாணவர் நித்யானந்த சுவாமிகள், 'சம்சார தரணி' எனும் உரையும், கோவிலூர் வீரசேகர சுவாமிகளின் மாணவர் சுப்பையா சுவாமிகள், 'ஸ்ரீ வீரசேகரம்' எனும் உரையும் எழுதியுள்ளனர். இவ்விரு உரைகளும் இணைக்கப்பட்டுத் தற்போது இந்நூல் கோவிலூர் மரபுப் பாட வரிசையில் 16ஆம் பாடமாக உள்ளது.

ஸ்ரீ ராமரைப் பற்றிய நூலெனினும், இதில் அவரது இளமைக் காலத்து, யாகத்திற்கு உதவி வேண்டி, விசுவாமித்திரர் அயோத்தி வரும் பகுதிமட்டுமே பேசப்படுகிறது. பின்னர் வசிட்ட உபதேசம் தொடர்கிறது. இந்நூல் 6 பிரகரணங்களும் 37 உட்கதைகளும் கொண்டது. இதனை யோக வசிஷ்டம், உத்தர ராமாயணம், வமல மகா ராமாயணம், பிருகத்யோக வசிஷ்டம் எனும் பெயர்களாலும் குறிப்பிடுகின்றனர்.

இந்நூல் கூறப்பட்ட காலத்து, ஸ்ரீராமர், ஞானியோ, அஞ்ஞானியோ அல்ல. அவர், குருவிடம் பாடம் கேட்டு முடித்த அரசகுமாரர். அப்போது அவர் வயது 15-16 ஆகும். ஆதலால் இந்நூலில் மற்ற வேதாந்த நூல்கள் கடைப்பிடிக்கும் தர்க்கம், நியாயம், பிரமாணம் நேதிநேதி போன்றவையின்றி, கதைகள் மூலமாக முக்தி நெறி

பேசப்படுகிறது. இந்நூலை 'அஜாதவாத அத்வைதம்' என்கிறார்கள்.

இந்த நூலும் இதற்கான உரைகளும் மணிப்பிரவாள நடையிலமைந்தவை. இதனை இன்றையத் தமிழ்மாணவன் புரிந்துகொள்ளுமளவு எளிமைப்படுத்தி, 37 பகுதிகளுக்கும், ஒவ்வொன்றுக்குமான கதைப்பகுதி மற்றும் தத்துவப்பகுதி என, இனிவரும் இதழ்களில் வெளியிடப்படும். அதற்கு முன்னர், இம் முன்னுரைக்கான கதைப் பகுதியும், நூலுக்கான பொதுத் தத்துவமும் கீழ்க்கண்டவாறு :

**கதைப்பகுதி :** மேருமலையில், பிரம்மாவின் முன்னிலையில் ராமாயணம் படிக்கப்பட்டபோது, பரத்வாஜ முனிவர் பிரம்மாவிடம், "ஸ்ரீ ராமரைப் போன்று உலகியல் துன்பங்களுக்கு ஆட்பட்டோர், அதனினின்று விடுபடச் சாதனமான ஓர் சாத்திரம் செய்விக்கப் படவேண்டும்" என வேண்டிக்கொண்டார். அவரது குருவான வால்மீகி முனிவரால் இது முன்னரே செய்யப்பட்டுள்ளது என அறிந்து கொண்ட பரத்வாஜர் அவரிடம் சென்றார். வால்மீகி முனிவரும், இத்தகைய ஞானம் வசிட்ட முனிவரால் ஸ்ரீராமருக்கு உபதேசிக்கப்பட்டதை அறிவேன். அதனையே உமக்கும் உபதேசிப்பேன் எனக் கூறி இந்நூலைத் தொடங்கினார்.

இத்தொடக்கம், வேறு வகையாகவும் கூறப்படுகிறது. அதற்கான கதையாவது : அகத்திய முனிவருக்கு, சுதீசணா எனும் மாணவன் இருந்தான். அவன் அகத்தியரிடம், "முக்தி பெற ஞானம் மட்டும் போதுமா அல்லது கர்மாவும் வேண்டுமா" எனும் ஐயப்பாட்டை வினவினான். அதற்கு அவர், காருண்யா எனும் மாணவன், செய்தாகவேண்டிய கடமைகளை (நித்ய கர்மானுஷ்டானம்) விடுத்துச் சும்மா இருந்ததைக் கேட்ட தந்தையிடம், "செயல்கள் பற்றினை உண்டாக்கும். பற்றுவிடுதலே ஞானம்பெற வழி" என்றான். தன் மகன் சாத்திரத்தைத் தவறாகப் புரிந்து கொண்டுள்ளான் என அறிந்து தந்தை, அவனுக்கு ஒரு கதை கூறினார்.

அக்கதையாவது : நற்றவம் புரிந்தமையால், அரிச்டமி எனும் மன்னவனை இந்திர உலகு வருமாறு தேவர்கள் அழைத்தனர். அரிச்டமிக்கு இந்திர உலகு செல்ல விருப்பமில்லை. இதனைத் தேவர்கள் இந்திரனிடம் கூறினர். அதற்கு இந்திரன், "அரிச்டமி முக்திபெற ஏதுவாக, வால்மீகி முனிவரிடம் அழைத்துச் செல்க" எனப் பணித்தான். தம்மை அடைந்த அரிச்டமியிடம், வால்மீகி, "ஸ்ரீ ராமருக்கு வசிட்டர் உபதேசித்ததாகக் கூறப்படும் இச்சாத்திரம், எம்மால் எழுதப்பட்டு, பரத்வாஜ முனிவருக்கு உபதேசிக்கப்பட்டது. அதை உமக்கும் கூறுவேன்" என்று ஞான வாசிட்ட சாத்திரம் கூறத் தொடங்கினார்.

**தத்துவப் பகுதி :** வேதாந்தத்தின் அனைத்துக் கோட்பாடுகளும், அவை கூறும் தத்துவங்களும் ஒரு சேர இந்நூலில் தரப்பட்டுள்ளன. மேலும், ஆன்மீக வாழ்வில் நாட்டமுடையோர், இன்றைக்கும் எதிர் நோக்கும் தத்துவ முரண்பாடுகள் கூறப்பட்டு, அவற்றை எதிர்கொண்டு சரி செய்யவும், மற்றும் நூலறிவு ( பரோட்ச ஞானம்) பெற்றவர் அதனைத் தற்பர உணர்வு (அபரோட்ச ஞானம்) ஆக்கத் தேவையான பயிற்சி/வழி முறைகளும் பற்றிப் பெரிதும் பேசுவது இந்நூல். இதில், மிகுதியும் கூறப்படும் தத்துவங்களாவன :

1. தீய முற்பிறவிப் பதிவுகளே (வாசனை) தற்போதைய உலகியல் துன்பங்களுக்குக் காரணம்.

2. வாசனைகளும், தற்போதைய பொருளாசைகளும் உலகப் பற்றினை மிகுதியாக்குவன.

3. உலகமானது எப்போதும் உள்ளது (நித்யம்) அல்ல. அது நீல வானம் போன்று பொய்யானது.

4. வாசனை, ஆசை, அகங்காரம் அற்றுப்போய், புலனடக்கம், விசாரணை, மகிழ்ச்சி, சத்சங்கம் (நல்லோர் கூட்டு) பெற்றால் இப்பிறவியிலேயே முக்தி (ஜீவன் முக்தி) கிட்டும்.

5. மன அடக்கம், மனலயம் (இயைபு), மனமின்மை வாயிலாகத் துரிய நிலை (ஞானம் - உண்மை அறிவு) பெறலாம்.

6. எத்தொழில் செய்பவனாகிலும் (வர்ணம்) சத்துவகுணத்தோடு செய்யும் செயல்கள் துரிய நிலையிலும் அத்துவித ஞானத்திலும் முடியும்.

7. பரம்பொருள் பலவாறாகப் பிரிந்த தோற்றத்தைத் தருகிறது என உணர்தல் தூய வாசனை. இதனைப்பெற்றவன் மறுபடி பிறவான்.

8. விசாரணை செய்தல் இன்றியமையாதது. உலகு பொய் என விசாரணையால் உணர்ந்தவன், பின்னர் பொய்யற்றது (ஆன்மா) பற்றிய விசாரணை செய்தால், அவன் சாந்தியும் சமநிலையும் பெறுவான்.

9. யோகம், கர்மா, ஞானம், உலகியல் என அனைத்தின் மூலமாகவும் முக்திகிட்டும். ஆனால் அவ்வவற்றில் சத்துவ குணத்தால் துரியநிலை பெற வேண்டும்.

10. நூலறிவு மட்டும் (பரோட்ச ஞானம்) உடையவனோ, அறியாமை உடையவனோ (அஞ்ஞானி) இவற்றை அறிதற்கில்லை.

*தொடரும்....*

# இலக்கியப் பூங்கா உரை
# இளையான்குடி மாற நாயனார்

( நீ. இரவிச்சந்திரன், வேதாந்த மாணவர் )

நாயன்மார் என்ற சொல்லுக்குத் தலைவர், கடவுளர், பெருமையில் சிறந்தோர் என்ற மூன்று பொருள்கள் கூறப்படுகின்றன. பொது வகையில் இந்த மூன்று பொருள்களைக் குறித்தாலும் சிறப்பு வகையில் பெரிய புராணத்தில் பேசப்படும் 63 தனியடியார்களையே குறிக்கிறது. ஒவ்வொரு அடியாரையும் தனித்துக் குறிப்பிடும் போது நாயனார் என்றும், 63 பேர்களையும் மொத்தமாகக் குறிப்பிடும் போது நாயன்மார் என்றும் குறிப்பிடப்படுகிறது.

இவர்களின் அறிவும் உணர்வும் இறையன்பில் கரைந்துபோய் விட்டதால், இவர்கள் உலக நியதிக்கு உட்பட்டுவாழும் நிலையைக் கடந்துபோய் விடுகிறார்கள்.

இதன்காரணமாக இவர்களின் ஊனஉடல் ஞான உடல் ஆகிறது. ஊன உடலுக்கு உரிய பசு கரணங்கள் எல்லாம் ஞான உடலுக்கு உரிய பதிகாரணங்களாகி மாற்றம் பெற்று விடுகின்றன.

இத்தகைய இயல்புகள் கொண்ட 63 நாயன்மார்களுள் ஒருவராக இளையான்குடி மாறநாயனார் இடம்பெற்றுள்ளார்.

**இளையான்குடி எங்குள்ளது ?**

பெரியபுராணத்தில் குறிப்பிடப்படும் இளையான்குடி எங்குள்ளது என்பது குறித்துக் குழப்பம் நிலவுகிறது. ஏன் இந்தக் குழப்பம் என்றால் பெரும்பாலும் திருத்தொண்டர்கள் திருவவதாரம் செய்த திருப்பதிகளைக் கூறும் போதெல்லாம், இத்திருப்பதி இந்த நாட்டின்கண் உள்ளது என்று அந்தந்த நாயனார் புராணத்தில் இடம் சுட்டி விளக்குதலை மரபாகக் கொண்ட சேக்கிழார் பெருமான், இளையான்குடி மாற நாயனார் பிறந்த இளையான்குடி எந்த நாட்டின்கண் உள்ளது என்று தெளிவாகக் குறிப்பிடாமையினால் சோழ நாடு, பாண்டியநாடு, தொண்டைநாடு

ஆகிய மூன்று நாட்டுக்காரர்களும் இளையான்குடி மாற நாயனாரைச் சொந்தம் கொண்டாடுகிறார்கள். அதற்கு ஆதாரமும் காட்டுகிறார்கள்.

ஆனாலும் இளையான்குடி பாண்டிய நாட்டுப் பதியே என்ற கருத்து வலுப்பெற்றிருக்கிறது. அந்தவகையில் பார்த்தால் 63 நாயன்மார்களுள் தற்போதைய சிவகங்கை மாவட்டத்தைச் சேர்ந்த ஒரே அடியார் இளையான்குடி மாற நாயனார் மட்டும்தான்.

**மாறனாரின் குணமும் குலமும் :**

இளையான்குடி மாற நாயனாருக்குச் சேக்கிழார் பெருமான் 27 பாடல்கள் ஒதுக்கியுள்ளார். இந்த 27 பாடல்களும் 27 நட்சத்திரங்களைப்போல ஒளிவீசுகின்றன.

முதல் பாடலில் இளையான்குடி மாற நாயனாரின் குணப்பெருமையும் குலப்பெருமையும் கூறப்படுகிறது.

அம்பொன் நீடிய அம்ப லத்தினில்
ஆடு வாரடி சூடுவார்
தம்பி ரானடி மைத்தி றத்துயர்
சால்பின் மேன்மை தரித்துளார்
நம்பு வாய்மையின் நீடு சூத்திர
நற்கு லம்செய் தவத்தினில்
இம்பர் ஞாலம் விளக்கினார்
இளையான் குடிப்பதி மாறனார்

முதல் இரண்டு அடிகளில் அவரின் குணப்பெருமை
அடுத்த இரண்டு அடிகளில் அவரின் குலப்பெருமை.

பொன்னம்பலத்தில் திருநடனமிடும் இறைவனின் திருவடிகளைத் தன் தலையினில் சூடியவர். இத்தகைய இறைவனான சிவபெருமானுக்குத் தான் அடிமை என்ற பெருமித உணர்வு கொண்டவர். இது அவருடைய குணம்.

அவருடைய குலம் வேளாண்குலம் என்றும் நான்காம் வருணம் என்றும் அழைக்கப்படுகின்ற சூத்திர குலம். நான்காம் வருணம்

என்பதாலே நான்கு அடைமொழிகள் கொடுக்கிறார்.

நம்பு, வாய்மையில், நீடு, நல்

நம்பு - நம்பிக்கைக்கு உரிய சூத்திர குலம்

வாய்மையில் - உண்மையுடைய சூத்திரகுலம்

நீடு - தொன்மையுடைய சூத்திர குலம்

நல் - நல்ல சூத்திர குலம்.

இத்தகைய மேன்மைமிக்க சூத்திரகுலம் இந்த உலகை விளங்கச் செய்யும் திருமகனைப் பெறவேண்டும் என்று தவம் செய்தது. அதன் தவத்திற்குக் கிடைத்த வரமாக இளையான்குடி மாறனார் தோன்றினார்.

**குபேரவாழ்வும் அடியவர் பணியும் :**

சூத்திர குலத்தின் தவப்பயனாகத் தோன்றிய இளையான்குடி மாறனாரின் வாழ்க்கை எவ்வாறு இருந்தது? அவரின் உள்ளம் எவ்வாறு இருந்தது என்பதைச் சேக்கிழார் பெருமான் இரண்டாவது பாடலில் கூறுகிறார்.

ஏரின் மல்கு வளத்தினால் வரும்
எல்லை இல்லதோர் செல்வமும்
நீரின் மல்கிய வேணியார்
அடியார் திறத்து நிறைந்ததோர்
சீரின் மல்கிய அன்பின் மேன்மை
திருந்த மன்னிய சிந்தையும்
பாரின் மல்க விரும்பி மற்றவை
பெற்ற நீடு பயன் கொள்வார்.

வேளாண்மையினால் வந்த ஏராளமான செல்வம் என்கிறார் சேக்கிழார் பெருமான். இளையான்குடி மாறனார் வாழ்ந்த காலம் மாதம் மூன்று மழை பொழிந்த காலம். அதனால் வேளாண்மை வருவாய் தரக்கூடிய தொழிலாக இருந்திருக்கிறது.

வேளாண்மையினால் வந்த ஏராளமான செல்வம் மட்டுமல்ல, அதனால் அடையக்கூடிய பயனும், அன்பு நிறை உள்ளமும் அவரிடத்தில் இருந்தது.

செல்வத்தின் பயன் அடியார்க்கு உணவளித்தல் அன்புள்ளத்தின் பயன் அடியாரை வணங்குதல். அடியாரை வணங்குதலென்றால் சாதாரணமாக இல்லை. சிவனடியாரைச் சிவனாகவே கருதி வழிபடுதல். இதற்கு மாகேசுர பூஜை என்று பெயர்.

**மாகேசுர பூஜை :**

சிவபெருமானை மகேசுரனாக வழிபடுவது மகேசுர பூஜை. சிவனடியார்களை மகேசுரனாகக் கருதி வழிபடுவது மாகேசுர பூஜை.

திருமந்திரத்தின் ஏழாம் தந்திரம் இந்த மாகேசுர பூஜையின் முக்கியத்துவம் பற்றிக் கூறுகிறது. சிவஞான போதத்தின் 12ஆம் நூற்பாவும் சிவனடியாரையும், சிவாலயத்தையும் சிவனாகவே கருதி வழிபட வேண்டும் என்று கூறுகிறது. சேக்கிழார் பெருமான் இளையான்குடிமாற நாயனார் புராணத்தில் மாகேசுர பூஜை செய்யும் விதத்தை இரண்டு பாடல்களில் கூறுகிறார்.

ஆரம் என்பு புனைந்து ஐயர்தம்
அன்பு என்பதோர் தன்மையால்
நேர வந்தவர் யாவ ராயினும்
நித்தமாகிய பக்தி முன்
கூர வந்தெதிர் கொண்டு, கைகள்
குவித்து நின்று, செவிப்புலத்து
ஈர மென்மது ரப்பதம் பரிவு
எய்த முன்னுரை செய்தபின்
கொண்டு வந்து மனைப்புகுந்து
குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலின் ஆசனத்திடை
வைத்து, அருச்சனை செய்தபின்,
உண்டி நாலு விதத்தில் ஆறு
சுவைத் திறத்தினில் ஒப்பிலா
அண்டர் நாயகர் தொண்டர் இச்சையில்
அமுது செய்ய அளித்துளார்.

இப்பாடலில் மாகேசுர பூஜையின் படிநிலைகள் கூறப்படுகின்றன.

1. **குணம் குலம் ஆராயாமை :**

நம் இல்லம் நோக்கித் திருநீறும் ருத்ராட்சமும் அணிந்து சிவவேடத்தோடு வரும் சிவனடியார்களின் குணத்தையோ குலத்தையோ ஆராயாமல் அவர்களைச் சிவபெருமானாகவே கருத வேண்டும்.

2. **இன்மொழி கூறி வரவேற்றல் :**

வந்த சிவனடியாரை நாம் எதிர்கொண்டு அன்புடனும் பக்தியுடனும் வரவேற்று, கைகூப்பி நின்று அவர்களது காதில் அன்பில் நனைந்த மென்மையான, இனிமை தரக்கூடிய சொற்களைக் கூற வேண்டும்.

3. **வழிபாடு செய்தல் :**

இல்லத்திற்குள் அவரை அழைத்து வந்து ஓர் ஆசனத்தில் அமர்த்தி அவரது திருப்பாதங்களைக் கழுவி, அந்தப் புனித நீரைத் தன் தலையில் தெளித்துக் கொண்டு, பாதங்களுக்குப் பூக்களால் அருச்சனை செய்து, தூபதீபங்கள் காட்டிப் பூமியில் விழுந்து வணங்க வேண்டும்.

4. **அறுசுவை உணவளித்தல் :**

உண்ணுவன, தின்னுவன, நக்குவன, பருகுவன ஆகிய நான்கு விதமாகவும், இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு என்ற ஆறு சுவைகள் உடையதாகவும் உள்ள உணவினைத் தயார் செய்து அடியாரை அன்போடு அழைத்து அமுது செய்விக்க வேண்டும்.

5. **அன்புடன் வழியனுப்புதல் :**

அடியார் அமுது செய்து முடித்தபின் இந்த உடல் எடுத்ததன் பயனை இன்று நான் பெற்றேன் என்று கூறவேண்டும். அவர் புறப்படும்போது 14 அடிகள் அவர்பின் சென்று வழியனுப்பிவிட்டு வரவேண்டும்.

இவ்வாறு மாகேசுர பூஜையை மேற்கொண்டு செல்வச் செழிப்போடு இளையான் குடியில் குபேரனாக வாழ்ந்துவரும் மாறனார் மீது சிவபெருமானின் பார்வை விழுகிறது.

**வறுமையிலும் வைராக்கியம் :**

வளமையில் மட்டுமல்ல வறுமையிலும் மாறனார் அடியார்க்கு அமுதளிக்கும் திருத் தொண்டில் வைராக்கியமாக இருப்பார் என்பதை உலகிற்கு அறிவிக்க உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன் திருவுளம் கொள்கிறார். மாறனாரின் குபேரவளம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைய ஆரம்பிக்கிறது. வறுமை அவரோடு வாசம் செய்யத் தொடங்குகிறது. ஆனாலும் அவரின் அடியார்க்கு அமுதளிக்கும் கொள்கையில் குறையேற்படவில்லை.

மாறனாருக்கு வந்த வறுமை இயற்கையான வறுமை அல்ல. திட்டமிட்டு இறைவனால் வழங்கப் பட்ட வறுமை. இத்தகைய வறுமை வாழ்க்கையினை வாழ்ந்து வரும்போதில், ஒரு நாள் இரவு. வெளியே கடுமையான மழை பெய்து கொண்டிருக்கிறது. இரவில் உண்ண உணவில்லாமையால் மாறனாரும் அவரது மனைவியாரும் பட்டினியோடு படுக்கைக்குச் செல்கிறார்கள்.

அப்போது வீட்டின் முன்பக்கக் கதவு தட்டப்படுகிறது. கதவைத் திறந்து மாறனார் பார்க்கிறார். வெள்ளிப்பனிமலையை இருப்பிடமாகக் கொண்டவர் அடியாரின் வேடத்தில் மழையில் நனைந்த உடலோடு வாயிலில் நிற்கிறார்.

மாறனார் அவரை அன்பு மீதுர இல்லத்தினுள் அழைத்து வருகிறார். அவரது உடலைத் துடைத்து, உடுக்கத் துணிகொடுத்து உட்கார வைத்துவிட்டு மனைவியிடம் வருகிறார்.

நமக்கு முன்பிங் குணவிலை யாயினும்
இமக்குலக் கொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாம்இன் அடிசில் தகவுற
அமைக்கு மாறு எங்ஙனே அணங்கே - என

நமக்கு உணவில்லையென்றால் நாம் பசியோடு இருந்து கொள்ளலாம். ஆனால் சிவனடியார் பசியோடு வந்துவிட்டாரே ! அவரின் பசியைப் போக்க வேண்டுமே என்ன செய்வது ? என்று மனைவியிடம் கேட்கிறார்.

**மனைத்தக்க மாண்புடையாள் :**

சிக்கல் வரும் நேரத்தில் மனைவியைக் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்ற இல்லறப் பண்பை எடுத்துக் காட்டுவதோடு, மனைமாட்சியில் வள்ளுவர் கூறும் மனைவிக்கு இலக்கணமாக மாறனாரின் மனைவியைப் படைத்துக் காட்டுகிறார் சேக்கிழார் பெருமான்.

மனைத்தக்க மாண்புடையாள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

இக்குறட்பாவுக்கு உரையெழுதுகிற பரிமேலழகர் மாண்பு என்ற சொல்லுக்கு நற்குணங்கள் நற்செய்கைகள் என்ற இரண்டு அம்சங்களைக் கூறுகிறார்.

**அவற்றில் நற்குணங்களாவன :**

1. துறந்தார்ப் பேணல் 2. விருந்து அயர்தல் 3. வறியார் மாட்டு அருளுடைமை

**நற்செய்கைகளாவன :**

1. வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களை அறிந்து கடைப்பிடித்தல் 2. அட்டில் தொழில் வன்மை 3. ஒப்புரவு செய்தல்.

இந்த ஆறு பண்புகளை உடையவளே மனைத்தக்க மாண்புடையாள். அப்படிப்பட்ட மாண்புடைய மனைவியாக மாறனாரின் மனைவி இருந்தார்.

அமுது செய்விக்க வேண்டும் என்று அடியாரை ஐந்து நிமிடத்தில் வீட்டிற்கு மாறனார் அழைத்து வந்து விடலாம். ஆனால் அவரை உபசரித்து, உணவு தயாரித்துப் பரிமாறுவதுவரை மனைவியைச் சார்ந்தது. மனைவியின் ஒத்துழைப்பு இல்லையெனில் விருந்தோம்பல் என்னும் செயலே இல்லறத்தில் நடைபெறாது.

அடியார் ஒருவர் பசியோடு வந்திருக்கிறார்; அவருக்கு இப்போது உணவிட வேண்டுமே என்ன செய்வது? என்று அவர் கேட்டவுடனேயே மாறனாரின் மனைவி, ஒன்றும் புரியவில்லை ;

நமக்குக் கொடுப்பவர்கள் இனி யாரும் இல்லை; அப்படியே கொடுப்பவர்களைத் தேட வேண்டும் என்றாலும் அதற்கான நேரமும் இதுவன்று; என்ன தீவினை செய்தேனோ இப்படி ஒரு நிலை வந்துவிட்டதே என்று வருந்தினார்.

சாதாரண மனைவியாக இருந்திருந்தால் வருத்தம் தெரிவிப்பதோடு தன்வேலை முடிந்தது என்று இருந்திருப்பார். ஆனால் மாறனாரின் மனைவி கணவன் தொண்டுவழி ஒழுகும் காரிகையாக இருந்ததால் உடனே அவரது உள்ளத்தில் ஒரு தீர்வும் கிடைக்கிறது அவர் கூறுகிறார்.

செல்லல் நீங்கப் பகல் வித்திய செந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமுது ஆக்கலும் ஆகும் மற்று
அல்லது ஒன்றறியேன் என்று அயர்வுற

நம் துன்பம் நீங்குவதற்கு, இன்று பகலில் நீங்கள் வயலில் விதைத்த நெல்மணிகள் பெய்த மழையால் வயலில் மிதந்து கொண்டிருக்கும் அந்த நெல்மணிகளை எல்லாம் வாரிக் கொண்டு வந்தால் அதைவைத்து நாம் அடியாருக்கு அமுது செய்வித்து விடலாம் என்கிறார். மனைவி கூறிய உபாயத்தைக் கேட்டவுடன் மாறனார், தாம் முன் தேடிவைத்த செல்வத்தை இடையில் இழந்து மீண்டும் பெற்றதுபோல உள்ளம் மகிழ்ந்தார்.

கையில் கூடையை எடுத்துக் கொண்டு வயலை நோக்கிப் புறப்படுகிறார். எதிரில் இருக்கும் பொருள் தெரியாத இருள்மழை. முன்பு நடந்த பாதை ஆதலால் பாதையைக் கணக்கிட்டுத் தன் வயலை நோக்கிச் செல்கிறார்.

கணவன் வயலுக்குச் சென்றுவிட்டார். அவர் வரும்வரை வீட்டுக்குள் இருப்போம் என்று மாறனார் மனைவி நினைக்காமல் வாசலிலேயே கணவன் பத்திரமாக நெல்மணிகளை வாரிக்கொண்டு வரவேண்டுமே என்ற மனப் பதற்றத்தோடு நிற்கிறார்.

*தொடரும்....*

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**